# செங்கரும்பு





கவிஞர்

ஸி. நவராஜ் செல்லையா, M.A., D.P.E.

முதல்வர்

கிங்ஸ் டியூடோரியல்ஸ், சென்னை-33



ராஜ்மோகன் பதிப்பகம்

49, இரயில்வே பார்டர் ரோடு,

## சிறப்புரை

ாழுதுவோரில் இருவகையினர். தமக்காகவே
கருத்தையே முதலாகக்கொண்டு எழுதுபவர்
வகையினர்.

பிறருக்காகத் தமது கருத்துக்களையே அடகு
ந்துவிட்டுப் பிறருக்காகவே எழுதுபவர்
ருரு வகையினர்.

இந்த இருவகையினரில் முந்திய வகை
ாக முகிழ்ப்பவர், முழக்குபவர் நண்பர் திரு
செல்லையா ஆவர்!

ண்ணும் எண்ணத்தை அடகு வைத்தே—நித்தம்
எழுதிப் பிழைத்தே வாழ்வதிலும்—ஏழெட்டுக்
ழுதை மேய்த்து வாழ்வதுவே
கண்ணியமான வாழ்வாகும்!"

புதுமைக் கவிஞரின் கவிதைக்கு மேற்
ாக இருப்பவர் செங்கரும்புக் கவிஞர்!

'அஞ்சுவது யாதொன்றுமில்லை—இனி
அஞ்ச வருவதும் இல்லை"

ஞர் மிக்காரும் ஒப்பாருமில்லாத அப்பரடிகள்.

இவர் நெஞ்சில் நினைத்தக் கருத்துக்
கவிதையாக வழங்கத் துடித்தவுடனே
வெளிப்படையாக,

சொல்ல அஞ்சியதில்லை—இனிச்
சொல்லுதற்கும் அஞ்சுவதில்லை!

என்ற தருக்குடனேயே செங்கரும்பு நறுக்குக
படைத்துள்ளார்! சில இடங்களில் இலக்கண
தட்டுவதைக் கண்டு சில கவிஞர்கள் அவ்விட
தைத் தாண்டுவதற்குத் தட்டுத் தடுமாறுவார்க
ஆனால் இவரோ, அதனைச் சட்டை செய்யாம
தட்டும் இடத்தைத் தாண்டாமல்—தட்டிவிட்டே
செல்லும் துணிவுடையவர்! இதற்கு இவ்
விருத்தப் பாடல்களே எடுத்துக்காட்டுகளாகும்.

காதலும் நகைச் சுவையும் கலந்து பா
வதில், இவர் செங்கரும்பைப் புளிப்பாக்குவார்!

சுமையான கவை அதற்குச் சரியான எடுத்து
காட்டு.

"தாய்சுமப்பாள் தன்மகவைப் பத்துமாதம்.
தகப்பனுக்கோ அச்சுமைதான் ஆயுட்காலம்!"

'உணவுக்கு உப்பினைச் சேர்ப்பார்......' என்ற
கவிதை வரிகள், கவிஞரின் நெஞ்சத்தின் நினைவு
நிழல் விரிவுகளாகும்!

"தொடரும் கதை" என்ற தலைப்பிலுள்ள
கவிதைகள், படிப்போர் நெஞ்சைக் கவரும்

கவிதைகளாகும்! கோதுள்ள செங்கரும்பை எவ்விடத்தில் கடித்தாலும் இனிக்கும், சுவைக்கும்! அதுபோலவே, நவராஜ் செல்லையாவின் கவிதைகளில் எந்தப் பாடலைப் படித்தாலும் சுவை முகிழ்க்கும்!

இவர் தந்துள்ள 'செங்கரும்பு'

'தித்திப்பான கரும்பு—அதைச்
செந்தமிழ்போல் விரும்பு'

என்று கற்பாரைப் பாடிக் குதிக்கச் செய்யும் பண்பான கவிதைகள்.

அதனால், செங்கரும்புக் கவிஞர், சுவைமிக்க செங்கரும்புத் தோட்டம் வளர்ப்பாராக!

வாழ்க கவிஞரின் கவிதை வளம்!

கவிஞர் தமிழ்முடி
தமிழ்முடி நிலையம்
சென்னை-4

# என்னுரை

செங்கரும்பின் நிறம் வேறு, தரம் வேறு, சுவை வேறு, பொங்கிவரும் என் கவியின் தரம் வேறு, திறம் வேறு, சுவை நூறு.

செங்கரும்பைக் கடித்துப் பாருங்கள், சுவை தெரியும். நூல் வடிவில் சங்கமமாகியுள்ள கவிதைகளைப் படித்துப் பாருங்கள், சுவை புரியும்.

இந்நூல் முதல் தொகுப்பு—முயற்சியில்தான். ஆனால் அனுபவத்தில் அல்ல.

கவிஞர் தமிழ்முடி அவர்கள் அழகான சிறப்புரை ஒன்றைத் தந்திருக்கின்றார். அவர்களுக்கு என் அன்பு கலந்த நன்றி.

நண்பர் M. S. மணி அவர்கள் உரிய நேரத்தில் தரமாக அச்சிட்டுத் தந்திருக்கிறார். அவருக்கும் என் நன்றி.

என் பணிக்குத் தோள்கொடுத்துத் துணையிருக்கும் சாக்ரடீஸை பாராட்டி, இந்த நேரத்தில் நன்றியுடன் நினைக்கின்றேன்.

விளையாட்டுத்துறையிலிருந்து, பாட்டுத் துறையில் வரும் முதல் நூல் இது. முன்னர் ஆதரித்ததுபோல், இந்த நூலையும் ஏற்று, ஆதரிக்குமாறு அன்பர்கள் அனைவரையும் கேட்டுக் கொள்கிறேன்.

வணக்கம்

முதல்வர்
கிங்ஸ் டியூடோரியல்ஸ்,
சென்னை-33.

அன்புள்ள

எஸ். நவராஜ் செல்லையா

## "ஞானமலர் பாட்டிக்கு"

## காணிக்கை

இருகரம் நீட்டி, என்னை
ஏந்தினள் இன்பத் தாலே!
சிறுகரம் தாங்கா வண்ணம்
சிந்தினள் செல்வம் தன்னை!
தரமுடன் வாழும் பேற்றைத்
தந்தபொற் பாதந் தன்னில்
பெருமையால் படைக்கும் அன்புப்
பேரனைக் காப்பாய் பாட்டி!

நவன்

## ஆசிரியரின் நூல்கள்

---

1. ஒலிம்பிக் பந்தயத்தின் கதை
2. நீங்களும் ஒலிம்பிக் வீரராகலாம்!
3. விளையாட்டுக்களின் கதைகள்
4. விளையாட்டுக்களின் விதிகள்
5. விளையாட்டு விழா நடத்துவது எப்படி?
6. நீங்களும் உடலழகு பெறலாம்!
7. பெண்களும் பேரழகு பெறலாம்!
8. செங்கரும்பு (கவிதை)
9. நல்ல நாடகங்கள்
10. எதற்காக உடற்பயிற்சி செய்கிறோம்?

கோடிமிகு சொத்திருக்கும்; குடியிருக்கக்
கோயிலென மனையிருக்கும்; குரலைக் கேட்டு
ஓடிவர ஆளிருக்கும்; உலகைச் சுற்றி
ஊர்ந்துவர உந்திருக்கும்; உவகை மீறப்
பாடிவரப் புகழிருக்கும்; பசியைப் போக்கப்
பத்துவகைக் கறியிருக்கும்; வசதி பாரில்
கூடிவரும் வாழ்விருந்தும் கவலை நெஞ்சம்
குடியிருக்கும் வாழ்க்கையிலே இன்பம் உண்டோ? 1

இல்லெடுத்துக் குடியிருப்பார்; ஏற்றம் செய்வார்;
எண்ணமெலாம் வண்ணமுற அழகு செய்வார்;
சொல்லெடுத்துக் கவிதொடுப்பார்; சூழ்ச்சி கொண்டு
சூழ்ந்தவரின் கதைமுடிப்பார்; மலைக்குச் சென்று
கல்லெடுத்துச் சிலைவடிப்பார்; காலம் தோற்கக்
கற்பனைக்கு உயிர்கொடுப்பார்; ஆனால், நல்ல
வல்லமையை தன்னுடலில் வாழச் செய்யும்
வழிமறந்து நோய்தாக்க வருந்தி வாழ்வார்! 2

நித்திலம்போல் நன்னிலையில் உடலைப் பேணும்
நெறிமறந்த கீழ்மையினால், நோய்கள் வந்து
சத்திரம்போல் சாவடிபோல் தங்கி வாழ்ந்து
சாந்தியினை மாய்த்துவிட; அழகு தேய்ந்த
சித்திரம்போல், சிந்தையிலே நலிவு காண,
செய்வினைகள் தேக்கமுற, காலம் போன
பத்திரம்போல் பாரினிலே வாழ்கின்றாரே!
பார்த்தபடி படுகுழியில் வீழ்கின்றாரே! 3

கோடையினுல் வாடுகின்ற கொடிகள் போல
 கூரழிந்து சீரழிந்த தேகம் தன்னை,
ஆடையினுல் மூடிமறைத் தழகு செய்வார்!
 அணிகலன்கள் தான்பூட்டி அவலம் கொய்வார்
கூடைமலர் தோற்றுவிடும் வாசம் பூசி
 கோலமிட்ட வாசலெனக் காட்சி ஈவார்!
ஓடையிலே நீர்வறண்டால் மதிப்பார் உண்டோ?
 உண்மையிலே உடல்நிலையும் இஃதே கண்டீர்!

பொய்மறைத்து வாழ்ந்திடலாம்; போற்றி வாழும்
 பொன்மறைத்து வாழ்ந்திடலாம்; பேசிப் பேசி
கைமறைத்து வாழ்ந்திடலாம்; கடமை நீக்கிக்
 கண்மறைத்து வாழ்ந்திடலாம்; நோய்கள் கொள
மெய்மறைத்து எத்தனைநாள் வாழக் கூடும்?
 மேதினியில் ஒப்பனையோ நோயைச் சாடும்?
அய்யோஇன் நிலைதன்னை அறிந்தார் யாரே?
 அறிந்திருந்தால் இப்படியா உடலைக் கொல்வார்

பொன்னிருக்கும் இடந்தேடிப் பறப்பார்; அந்தப்
 போதையிலே தன்நினைவைப் புதைத்து நிற்பார்
மின்னிருக்கும் கண்ணடித்துச் சிரிக்கும் கன்னி
 மேனிபெற மூடரென மதியை விற்பார்!
பின்னிருக்கும் பேரிடரில் வீழ்வார்; துன்பம்
 பின்முதுகில் ஆடிவரும் மேடை ஆவார்!
இன்னமுதாம் தன்னுடலை மறந்தார் எண்ண!
 இவ்வுலகில் உடல்அழிந்தால் இருப்ப தென்ன?

எல்லோரும் இந்நாட்டின் மன்னர் என்றார்!
இப்படியா இருந்தார்கள் மன்ன ரெல்லாம்!
வல்லமைதான் மன்னருக்கு உடலில் வேண்டும்!
மன்னர்எனும் மக்களுக்கு வலிமை எங்கே?
செல்வத்தை வாழ்க்கையிலே இறைத்து விட்டால்
சிறப்பாக வாழ்ந்திடலாம் என்றே எண்ணி,
உள்ளத்தால் உடலாலே கெட்ட பேர்கள்
ஒதுங்கிவிட்ட இடந்தன்னை அறிவீர் நீங்கள்! 7

இயற்கையொடு வாழாத இளைஞர் எல்லாம்
இருக்கின்ற நிலையறிவீர்! இருந்தும் வாழ
இயலாத நிலையினிலே இருக்கும் வாழ்வு
இருந்தென்ன? போயென்ன? வெட்கம்! வெட்
துயரோடு வாழ்வதற்கா உலக வாழ்க்கை?
துடித்தேங்கிச் சாவதற்கா இந்த யாக்கை!
உயர்வாக மானிடராய் பெற்ற வாழ்வை
உயிராகத் தினம்காத்தே வாழ்வோம் வாரீர்! 8

ஆண்மையிலா உடலிருந்தால் என்ன லாபம்?
அதைச்சொன்னால் அனைவருக்கும் வருமே
கோபம்!
ஆண்மையிலா உடலோடு வாழ்தல் பாபம்!
அறிவுடையார் அறிந்திருந்தும் என்ன லாபம்?
ஆண்மையிலா மனிதகுலம் 'குடும்பம்' ஏற்று,
அடுத்தடுத்துக் குழந்தைபெற்றால் என்ன ஆகும்?
ஆண்மையிலா பெருங்கூட்டம் அதிகம் ஆகும்!
ஐயோஇத் திருநாடு அழிந்தே போகும்! 9

எண்ணத்தால் சிறப்பாக வாழ வேண்டும்;
இதயத்தில் நற்பண்பு சூழ வேண்டும்;
வண்ண உடல் பேரழகு காண வேண்டும்;
வாழ்வெல்லாம் பேராண்மை பூண வேண்டும்;
பண்பாடி புகழ்பாடி செழிப்பில் ஆடி
பாரதத்தில் வீரர்படை பெருக வேண்டும்;
என்றஒரு கருத்தோடு இனிமேல் வாழ
எல்லோரும் ஓர்சபதம் எடுப்போம் வாரீர்! 10

வீட்டுக்கு வீரமுள்ள தலைவன் ஆக,
விவகாரம் தீர்ப்பதிலே அறிஞன் ஆக,
நாட்டுக்குப் பணிசெய்யும் வீரன் ஆக,
நாளெல்லாம் துயர்தீர்க்கும் கலைஞன் ஆக,
பாட்டுக்கு உயிர்கூட்டும் கவிஞன் ஆக,
பாரதத்து மக்களெலாம் வாழ்தல் வேண்டும்.
கூட்டத்தால் நாட்டுக்கு லாபம் இல்லை!
குன்றாத உடல்வலிமை கொண்டோர் வேண்டும்! 11

காவிரியின் கரைவிரித்த பசுமை போல
காலமெலாம் கட்டுடலில் வளமை வேண்டும்.
பூவிரித்த மென்மையதன் பொலிவைப் போல,
பூத்திருக்கும் புன்னகையில் இளமை வேண்டும்.
பாவிரித்த சொல்லினிமை பயனைப் போல
பாரினிலே பணிபுரியும் திறமை வேண்டும்.
நாவிரித்த நல்லமொழி போலே என்றும்
நல்லஉடல் நல்லமனம் கொண்டே வாழ்வீர்! 1

ரவென்றும் பகலென்றும் பாரா தென்றும்
இளைப்பாற நேரமின்றி உழைக்கும் தேகம்
ரமாக இருப்பதனுல் உலவுகின்ரேம்,
உலகத்தில் நமைகாக்கும் உடலை, என்றும்
யிரோடு காத்தால்தான் வாழ்வோம் நன்ருய்!
பாழ்நிலம்போல் போட்டுவிட்டால் என்ன ஆகும்?
அறிவுடனே உடல்காக்கும் வழிகள் இங்கு
ஆயிரந்தான் உண்டதனை செய்வோம் வாரீர்! 13

சுதியமைத்தே சீர்யாழை மீட்ட வேண்டும்;
சுவரமைத்தே சித்திரத்தைத் தீட்ட வேண்டும்;
விதியமைத்தே விளையாட்டை ஆட வேண்டும்;
விழியமைத்தே வெற்றியினைச் சூட வேண்டும்;
நிதியமைத்தே நல்லறங்கள் போற்ற வேண்டும்;
நினைவணைத்தே நம்திறத்தை ஏற்ற வேண்டும்;
மதியமைத்தே வாழ்வமைத்துச் சிறக்க வேண்டின்
வலிவமைத்தே கட்டுடலைக் காக்க வேண்டும்! 14

நொடியேனும் நீளுலகை மறக்க வேண்டும்;
நொந்திருக்கும் மனச்சுமையைத் தொலைக்க வேண்டும்;
பிடியேனும் உணவருந்தப் புசிக்க வேண்டும்;
பேரின்ப நித்திரையும் பிடிக்க வேண்டும்;
கொடியோனும் சோம்பலினைக் குலைக்க வேண்டும்;
கொல்லவரும் கவலையினைக் கொல்ல வேண்டும்;
துடிப்போடு பந்தாட்டக் களத்தில் நின்ருல்
சூழ்ந்திடுமா மனக்கவலை! தொடரும் இன்பம்! 15

பந்துடனே மனம்குதிக்கும்; பாம்பாய் தீண்டும்
பாழ்கவலை நாம்ஓடப் பறந்தே ஓடும்!
வந்துடனே வாழ்வளிக்கும் நண்பன் போலே
வளம்வந்து வாழ்த்துரைக்கும் தென்றல்! இன்பம்
தந்துடனே தெம்பளிக்கும் புதுமை சொல்லும்
தன்னிலையும் நன்னிலையும் திறனை வெல்லும்!
வெந்துடனே துயரமெலாம் வீழ்ந்தே போக
விளையாட்டை ஆடிடுவீர்... விளையும் இன்பம்! 16

உடற்கலையால் உய்வதுவே உலக வாழ்க்கை!
உண்மையிதை உணராதார் உருப்படா தார்!
உடல்காத்தே உயிர்வளர்ப்பார் அறிஞர் எல்லாம்!
உடல்காவார் வாழ்வெல்லாம் உடைந்த பாண்டம்!
திடமிகுந்த உடல்இருந்தால் திண்மை சேரும்!
தீராத நோயொடுங்கும்! நன்மை கூடும்!
சுடர்பரிதி பேரொளிபோல் அழகு சேரும்!
சுகம்பெறவே உடலழகுப் பயிற்சி செய்வீர்! 17

ஆண்மையுடன் அழகுவரும், அறிவு சூழும்!
அசடழிந்த நல்லுடலில் ஆயுள் சேரும்!
மேன்மையுடன் மனம்வளரும், சக்தி மீறும்!
மேலோங்கும் நம்பிக்கையில் வீரம் மேவும்!
கேண்மையுடன் உயிருடலும் கலந்து நிற்கும்!
கெடுத்திருக்கும் தீநெறியைத் தடுத்தே ஓட்டும்!
மாண்புமிகு உடற்கலையால் மகிழ்ந்த பேர்கள்
மாநிலத்தில் பலகோடி! மகிழ்ந்தே செய்வீர்! 18

தத்துவக் கோயிலில் உயிர்மிகும் சிலையாய்,
புத்தகக் கடலிலே பொருள்மிகு அலையாய்,
வித்தகர் வாக்கிலே சொற்றொடர் சுனையாய்,
நித்தமும் வாழ்ந்திடும் அத்தனே வணக்கம்! 1

வித்திலே மரமென விளங்கிடும் வளமும்,
முத்திலே ஒளியென முழங்கிடும் நலமும்,
அத்தனைப் பொருளிலும் அணுவென வளரும்
உத்தமப் பொருளே உன்னடி சரணம்! 2

அணுவாய் இருந்து அவனியில் நிறைந்து,
கணத்தில் மாறிடும் காட்சியாய் திரிந்து,
தினமும் பொருளாய் வாழ்வுடன் கலந்து
மனதுடன் வாழ்ந்திடும் மாதவா! துணைவா! 3

பிறவியைத் தந்தாய்! பிறந்தவர்க் கெல்லாம்
உறுதுணை போல்அரும் உடலினைத் தந்தாய்!
மறதியோ இறைவா! மலர்ந்தநல் லுடலில்
குறைகளைக் கொடுத்தே கவலையை நிறைத்தாய்! 4

இறைவா! என்னிரு கரம்குவிக் கின்றேன்,
குறையுடை யேன்நான், சிரம்கவிழ்க் கின்றேன்,
சிறையில் கிளியெனத் துடிக்குமென் நெஞ்சம்,
கறையுடை நெஞ்சைக் கழுவிட அருள்வாய்! 5

உன்னிலே பிறந்தது உலகம் யாவும்!
உன்னிலே இருந்தே உயிர்கள் மேவும்!
உன்னால் உயிரினப் பறவைகள் கூவும்!
என்னால் உனக்கு இங்கென்ன பயனே! 6

பிறந்தேன் பூமியில் ஏனென அறியேன்?
இறந்தவன் போலவே இரவெலாம் உறங்கி
மறந்தவன் உன்னை பகலெலாம் மயங்கி!
வருந்தவோ திருந்தவோ இயலா பாவியேன் 7

சொல்லும் செயலும் சுகத்தினை விளைக்கும்
வல்லமை கொண்டதை வாழ்வினில் மாற்றியே,
அல்லதை விளைக்கும் இல்லமாய் ஆக்கித்
தொல்லையே பெறும்நான் பொல்லாச் சிறியவன்! 8

காயும் ஒருநாள் கனியும், என்மனக்
காயும் ஆசைக் கொடுமையாம் வெயிலில்
காயும்! சுவையுடன் கனிவது எந்நாள்?
மாயுதே விரைவில் பிஞ்சிலே பழுத்து! 9

பாயும் ஓடைநீர் பள்ளம் நோக்கியே!
பாய்வது போலவே பாவ நினைவுகள்
தோயும்! தொடரும் நோய்களைக் கூட்டியே!
மேயுது கவலைகள் அமைதியை ஓட்டியே! 10

மொழிகள் ஆயிரம் போற்றிட உண்டு!
வழிகள் ஆயிரம் தொடர்ந்திட உண்டு!
மொழியும் வழியும் உன்வழி இல்லை!
விழிகள் விளைத்திடும் உணர்ச்சியால் தொல்லை? 11

பட்டம் காற்றிலே பறப்பது போலவே
தொட்டதற் கெல்லாம் உணர்ச்சிகள் பறக்கும்!
கட்டியே இழுக்கும் அறிவெனும் கயிறும்
கெட்டியாய் இருந்தும் உறுபயன் காணோம்? 12

தவளை போலவே வாய்தனைப் பிளந்து,
கவலை களோடே காசையே நினைந்து,
எவரா னாலும் ஏய்த்திட முயலும்,
அவல மக்களில் ஒருவனே நானும். 13

வெள்ளை யடித்த சுவற்றின் மேலே
பிள்ளைகள் கரியால் கிறுக்குதல் போலவே,
உள்ளச் சுவற்றில் உணர்ச்சிகள் கிறுக்கும்;
கள்ளக் கிறுக்கலால் கதறுதென் வாழ்க்கை. 14

போலித் தன்மைகள் புரைபோல் ஓடவே,
வேலியே பயிர்தனை மேய்வது போலவே,
நூலிழை அறுந்த தறியென நுடங்கி
நாளும் என்னுடல் சிதறிடும் நினைவால்! 15

ஒருகரை பிறப்பு, மறுகரை இறப்பு,
இரண்டின் இடையிலே வாழ்க்கையாம் வெள்ளம்!
ஒருபட கோட்டிபோல் உருண்டிடும் காலம்!
இருப்பவர் எல்லாம் அவன்கை மேளம்! 16

கைவிரல் சூப்பித் தனிமையில் கிடந்து,
பொய்ச்சுவை காணும் குழந்தையைப் போலவே,
மெய்ச்சுவை என்றே வாய்ச்சுவை வளர்த்தே
தோய்ந்தே கிடக்கிறேன் அறியாத் தனத்திலே! 17

இரும்போ பறக்கும் காந்தம் இழுத்தால்!
நிரம்பிய நின்பெருங் கருணைக் காந்தம்
இரும்பென என்னை நினைத்தே இழுக்கும்!
இரும்பாய் இல்லைநான் துரும்பாய் பறக்கிறேன்! 18

வெயிலால் கொதிக்கும் வீதிப் புழுதியில்
யிலாய் புரளும் குதிரையும் கழுதையும்!
பொய்யும் பாவமும் பெருக்கிய புழுதியில்
யிலாய் தினமும் உருள்கிறேன் உவந்தே! 19

ாயும் வயிறும் கொண்டதோர் உறவென
யும் நானும் நிதமும் வாழ்கிறோம்!
ாயும் சேயும் தழுவுதல் போலவே
ய்ந்துனைத் தழுவும் பாக்கியம் இல்லையே! 20

முயலாய் குதிக்கும் முரட்டு நெஞ்சுடன்
இயற்கை குருஉனே, எதிர்த்தே படித்திட
முயலும் நானெரு முட்டாள் மாணவன்!
வயலை எதிர்த்தே வாழுமோ பயிர்தான்? 21

நிழலும் பொழிலும் இருந்தும் வெறுத்தே
மழையில் வெயிலில் ஆடும் குழந்தைபோல்,
பழியும் பாவமும் என்னையே அழைக்கும்!
அழிகிறேன் கூடியே அனுதினம் ஆடியே! 22

நீரிலே தோன்றும் நுரையாய் சிலபேர்!
நீரிலே தோன்றும் அலையாய் சிலபேர்!
நீரிலே தோன்றும் சுவையாய் சிலபேர்!
பாரிலே பிறப்பார்! ஆனல் நானே...? 23

சவுக்கு மரமென நெடிதே வளர்ந்தேன்!
நவநவக் கோலத்தில் நாளும் மிதந்தேன்!
சுவைகளின் சுகத்திலே கடவுளை மறந்தேன்!
சுவக்களை முகத்திலே படரவே இளைத்தேன்!! 24

சோற்று சுகமும், சுகந்தரும் தென்றல்
காற்று சுகமும், 'கட்டில்' சுகமும்,
மாற்றி மாற்றியே வந்தெனை மயக்கும்!
சேற்றில் கல்லென சிதைந்தே வாழ்கிறேன்! 25

கடற்கரை மணலில் களித்திடும் நண்டு,
நடையொலி கேட்டால் நடுங்கியே வளைக்குள்
வெடுக்கென நுழையும் பயத்தால்; அதுபோல்
எடுத்ததற் கெல்லாம் பயந்தே சாகிறேன்!

குப்பையைக் கிளறி இரைபெறும் கோழிபோல்,
தப்பிய வழியையே தினமும் கிளறி
உப்பிய புழுபோல், உலகிலே பணந்தான்
அற்புத வாழ்வென அகமகிழ் கின்றேன்!

எத்தனை இனங்கள், எத்தனை முகங்கள்,
எத்தனை மனங்கள், எத்தனை குணங்கள்,
அத்தனைப் பிரிவுமென் அறிவினைக் கலக்கும்!
பித்தனைப் போலவே அலைகிறேன் புவியில்! 28

புற்றிலே ஈசல் புறப்பட, அதன்மேல்
ஒற்றைக் கண்ணெழில் காக்கைஉட் கார்ந்தே,
சுற்றியே சுகம்பெறும். ஈசலைப் பொறுக்கும்!
உற்றஎன் வாழ்வும் ஓடுதே இவ்விதம்! 29

எங்கே தொடங்கும்? எப்படித் தொடர்ந்து
எங்கே அடங்கும்? ஏனது அடங்கும்?
எங்கே என்றுநான் வாழ்க்கைச் சுழலிலே
சங்கம மாகிறேன் சஞ்சலம் மீறவே! 30

ஊற்றென உமிழ்நீர் வாய்சுரப் பதுபோல்,
போற்றும் பொருள்களை அடைந்திடத் துடித்தே
ஊற்றென ஆசையை உள்ளம் சுரக்க
ஆற்ருமல்நான் அலறுகின் றேனே! 31

தேவை தனக்கெனில் தீயிலே குதிக்கும்!
தேவை பிறர்க்கெனில் சீயென மதிக்கும்!
சேவை நினைவையே தள்ளியே மிதிக்கும்
பாவ நெஞ்சுடன் புரள்கிறேன் நானே! 32

போதும் என்பதோர் பொன்மனம் இல்லை!
போதா மல்தினம் ஏங்கிடும் தொல்லை!
போதும் அளவுதான் புரியவே இல்லை!
ஏதோ மயக்கம் எதுதான் எல்லை? 33

கரையிலா கருணையால் ஈரம் கொடுக்க
கரையின் மணலை கடல்அலை நனைக்கும்.
சிறிது நேரத்தில் ஈரத்தை மறக்கும்
சிறுமணல் போலுனை மறக்குமென் சிந்தை! 34

இணையிலா நீர்வளம் இறைக்கும் கடல்நீர்
தணிக்குமோ தாகம்! தகவிலான் என்னிடப்
நினைவுகள் கோடி நிறைந்தே அலையினும்
தமோ? உனைப்பெறும் தாகம் தணிக்குமோ? 35

கல்லும் உளியும் காலமும் இருந்தும்,
கல்லா தவன்நான் சிலையினை வடிக்க;
உள்ளமும் உணர்வும் நேரமும் இருந்தும்
வள்ளலே மறந்தேன் உன்னையே நினைக்க! 36

கதவினை அடைத்து வீட்டையே காக்கினும்
அதனுள் புகுந்தே அலையும் காற்றுபோல்,
இதயக் கதவினை எப்படி மூடினும்,
இதமாய் நுழைந்தே இறைவன் வாழ்கிறான்! 37

இருக்கிறான் நம்மிடை! இயற்கையில் கலந்தே
சிரிக்கிறான் நம்மிடை! தினமும் கோடியாய்
பிறக்கிறான் நம்மிடை! பின்னிப் பிணைந்தே
சிறக்கிறான் நம்மிடை! மறந்தால் விடுவனோ? 38

ஏழையாய் வருகிறான் உதவிசெய் என்று!
கோழையாய் வருகிறான் வலிமைகொள் என்று
பிழையாய் வருகிறான் புனிதம் கொள்என்று!
சூழ்ந்தே வருகிறான் நம்மையே தொடர்ந்து! 39

வண்ணமும் கோடி; வடிவமும் கோடி;
மண்ணிலும் விண்ணிலும் வாழ்கிறான் கூடி!
எண்ணத் திலெல்லாம் இறைவனைக் கண்டேன்!
கண்ணால் கண்டே களிப்பதென் றளோ? 40

செங்குருதிக் குள்உயிராய் சிலிர்த் தெழுந்து,
சீர்மிகுந்த தாய்வயிற்றில் செழித்து வாழ்ந்து,
பொங்கிவரும் பெருநிலவாய் வளர்ந்து வந்து,
பூமியிலே சேயுருவாய் பிறந்த போது,
இங்கிருந்து வாழ்வோரில் எவரைக் கண்டோம்?
இங்கிதமாய் வாழ்ந்திடவே எதனைக் கொண்டோம்?
சங்கமமாம் கடலோடு நதியைப் போலே
சந்தித்தோம் புவிவாழ்வை பிறப்பி னாலே! 1

பூவொன்று செடியினிலே பூத்தாற் போல,
புவியினிலே ஓர்பிறவி மலர்ந்த பின்னர்,
பூவிருக்கும் குடலையென உடலி ருக்கும்?
புதுஉடலில் குடியிருக்கும் உயிரும் நன்றாய்
பூவாலே குடலைக்குப் பெருமை உண்டோ?
பூக்குடலை யாபூவைக் காத்து நிற்கும்?
சாவாலே உடலுயிரும் பிரிதல் போலே
சரித்திரங்கள் தினம்மாறும் உலகம் ஈதே! 2

பொதிசுமந்து போகின்ற மாட்டுக் கெல்லாம்
பொதியாலே பயனில்லை; வைக்கோல் தன்னை
பொதியேற்றும் எசமானன் போட்டால் உண்டு!
போடவில்லை என்றாலோ மாட்டின் பாடு?
விதிவந்து வாழ்க்கையிலே பொறுப்பைத் தந்து,
விரட்டிவிடும்! மக்களெலாம் அதைச்சு மப்பார்!
பதிலாக என்னவரும்? பார்க்கின் றோமே!
பாவமன்றிப் புண்ணியத்தை யாரே சேர்த்தார்! 3

பழச்சாற்றைக் கீழ்விட்டே சக்கை சேர்க்கும்
பன்னடை போன்றதடா நமது வாழ்க்கை!
பழமாகும் இலவென்றே பலநாள் காத்த
பைங்கிளியின் வம்சமடா நமது வம்சம்!
விழிப்போடு ஆப்பிழுத்து மாட்டிக் கொண்ட
மந்தியதன் கூட்டமடா நமது கூட்டம்!
சுழன்றோடும் ராட்டினத்தில் பயணம் செல்லத்
துடிக்கின்ற பிள்ளைகள்தான் தரணி மக்கள்!

அடைகாக்கும் கோழியென முணுமு ணுப்பு!
அந்தரத்து வௌவால்போல் தினம் நடப்பு!
கிடைகாக்கும் நாயாகப் பெறும்இ ளைப்பு!
கிணற் றகத்துத் தவளையென வாயளப்பு!
விடை தெரியா மாணவன்போல் பரிதவிப்பு!
மீளாத பொழுதோடு மனதைச் சேர்த்து,
அடையாளந் தெரியாத அடிச்சு வட்டில்
அடிவைத்து நடப்பதுதான் வாழ்வின் நோக்கம்

காற்றிரண்டு ஒன்றாகி நீராய் போன
கதைபோல அதிசயங்கள் கோடி கோடி,
வீற்றிருந்து மக்களுடை மனதை ஆளும்,
வேடிக்கை பார்ப்பவர்க்கோ மயக்கம் சூழும்!
ஆற்றிரண்டு கரைபோல, எதற்கும், என்றும்
அழிவென்ற ஆக்கமென்ற இரண்டும் உண்டு,
ஆற்றாத கொடியோன்போல், அழகை எல்லாம்
அழித்துவிட அருகிருப்பான் எமனும் வந்து!

பண்பாடும் ஐம்புலன்கள் பாதை காட்ட,
பருவத்தால் உருவத்தால் பயணம் செய்து,
தண்ணீரில் மிதந்தூரும் வாத்தைப் போல,
தானடையும் இன்பமதில் தான்மி தப்பார்!
மண்குளிர மழைவேண்டும் என்றோர்க் கெல்லாம்
மண்மாரி பெய்தாற்போல், இன்ப வாழ்வு
கண்ணீரில் கடுந்துயரில் முடியும் போது,
கங்கைநீரும் கானல்நீர் ஆகும் காணீர்! 7

தேகத்தைச் சுமக்கின்ற செருப்பி னுக்குத்
தேய்ந்தநிலை வந்தக்கால் தேடுவார் யார்?
காகத்தைக் கல்லெடுத்து விரட்டி விட்டுக்
கவளத்தை வைத்தழைத்தால் காணுவார் யார்?
போகத்தில் புரள்கின்ற தேகத் திற்குப்
புழுதிநிலை வந்தாலோ புகழு வார்யார்?
தாகத்தைத் தீர்க்கின்ற தண்ணீர் போலே
தரணியிலே நம்மனதைச் சேர்க்க வேண்டும்! 8

...பாடு போட்டிருக்கும் உலக மாயை,
...ழிக்குஞ்சை கொண்டுசெலும் கருடன் ஆகும்!
மூப்படையக் காத்திருக்கும் இளமை தன்னை
மூடிவைத்துக் காத்தாலும் முதிரும் ஓர்நாள்!
பூப்படைந்த பெண்ணவளைக் காக்கும் பெற்றோர்
பொறுப்பேபோல் இவ்வுடலைப் பேண வேண்டும்,
காப்பதெலாம் நோயணுகா உடலைத் தானே!
கடமையிதை உணர்வாரே கரையைச் சேர்வார்!

உரையில்லா நூல்போல உலக வாழ்க்கை!
உள்ளவரும் இன்னதென உணரா வாழ்க்கை!
அரைகுறையாய் அறிந்தறிந்து முன்நடந்தே,
அடுத்தடுத்துப் பின்தொடரும் அவதி நோய்க்கே,
இரையாகிக் குறையாகி இதயம் நோக,
இன்னலுக்குப் பலியாகும் கொடுமை போக,
கரைநோக்கும் காரணத்தை அறிதல் வேண்டும்!
கரைசேரும் காரியத்தைப் புரிதல் வேண்டும்! 1

தரைவீழ்ந்த தலைமுடியைச் தேடித் தூக்கித்
தலையினிலே வைத்தாலும் தங்குமோ தான்!
விரைவாக வாய்விட்டு வந்த வார்த்தை
மீண்டுமந்த வாய்க்குள்ளே செல்லுமோ தான்!
திரைகடலுள் கோடிநதி சேர்ந்த போதும்
சேர்ந்திருக்கும் உப்புசுவை தீருமோ தான்?
வரும்பொழுது வந்ததுதான்! வந்து விட்டால்
மீண்டுமது திரும்பாது! முடிவே என்றும்! 11

முடமான நம்பிக்கைக் கைகள் நீட்டி,
முடிந்தவரை வசதியுடன் வாழ எண்ணி,
திடமான முயற்சியிலே துணிந்து சென்றும்,
தேடியது இறுதியிலே பிடிமண் தானே!
கடல்நீரா கருணையுடன் தாகம் தீர்க்கும்?
கருந்தேளா கன்னமதில் முத்தம் வைக்கும்?
உடலுக்கும் அப்படியே உலக வாழ்க்கை!
உணர்ந்தார்க்கே தான்இனிக்கும் இந்த யாக்கை! 12

நான்ஓட்டம் போல்ஓடும் கால வெள்ளம்,
மனிதனுக்குத் தந்துவிடும் ஊமை உள்ளம்!
ஏன்ஓட்டம் காலத்திற்கு? என்று கேட்டால்
யார்தருவார் பதிலிதற்கு? பதிலோ மௌனம்!
வீண்ஓட்டம் என்பார்யார்? விரைந்து போன
வெள்ளத்தை முன்போலக் கொணர்வா ரும்யார்?
வான்ஓடும் மேகமென வாழ்வில் ஓடி
வந்தவரை பெறுவதுதான் புவியின் வாழ்வோ? 13

முதிராத உடலாக்கும் மருந்தோ இல்லை!
முன்நடக்கும் நாள்கணிக்கும் கணிதம் இல்லை!
அதிராத நெஞ்சாக்கும் ஆண்மை இல்லை!
அறிவிருந்தும் நெறிப்படுத்தும் அறிவும் இல்லை!
புதிரான இருட்குகைபோல் புவியின் வாழ்வு
போவோர்க்கும் புரியாத எலியின் பொந்து!
சதிராட்டம் போடுதல்போல் வாழ்தல் அன்றி
சலிப்பாலே சுகம்காண முடியுமோ தான்? 14

நடப்பினிலே சுகம்காண இயலா நெஞ்சம்,
நாளையென்ற நினைவுடனே முடங்கிக் கொஞ்சும்,
கடைவீதி மக்களென 'ஆசை'க் கூச்சல்
கண்இமைக்கும் பொழுதிற்குள் கோடி கேட்கும்.
முடைநாற்ற சாக்கடையில் தவறி வீழ்ந்தோன்
முகம்போல வாழ்விருக்கும்! என்ன செய்ய?
தடைபோடும் தைரியமோ நெஞ்சுக் கில்லை,
தன்னிச்சை யாய்திரிவோர் உயர்வ தெந்நாள்! 15

செல்லாக அரிக்கின்ற கவலை; தோலில்
சிரங்காக நமைக்கின்ற தொல்லை; சேற்றில்
நெல்லாக அமிழ்கின்ற நல்ல எண்ணம்;
நிழலாக மறைகின்ற தரும சிந்தை;
வில்லாக வளைகின்ற முதுகில் ஏறி
மிரட்டுகின்ற பாகனென காலம் ஓட்ட,
புல்லின்மேல் பனியாக வாழ்வி ருக்கும்!
போதாத நேரம்தான் எதிரே நிற்கும்! 16

காசில்லா காலமதில் கலங்கும் நெஞ்சம்
காற்றில்லா பந்தாகக் கிடக்கும்; கொண்ட
ஆசையெலாம் முளையினிலே அழியும் போது
அலிஒருவன் மனம்போலத் துடிக்கும்; அன்பு
பாசமெல்லாம் பணத்தாலே பிரியும் போது
பாம்பின்வாய் தவளையெனப் பதைக்கும்; இன்ப
வாசல்வரை வந்தோமென நினைக்கும் போது
வந்தநிலை முன்பைவிட மோசம் தானே! 17

ஓடிவரும் வெள்ளத்தை ஒதுக்கு தற்கே
உப்பிருக்கும் மூட்டைகளை அடுக்க லாமோ?
சாடிவரும் பெருந்தீயைத் தடுப்ப தற்கே
சருகெடுத்து மென்மேலும் மூட லாமோ?
கூடிவரும் புயல்மழையில் தப்பு தற்கே
கூரையிலா குடிசையிலே பதுங்க லாமோ?
கோடிதுயர் தரும்விதியின் கொடுமை கண்டு
கோழையெனக் கும்பிட்டால் ஒதுங்கிப் போமோ! 1

விதிவந்து செல்லுகின்ற வழியைக் காண
 விழியாலே முடியாது; கவலை என்ற
நதிஎந்தத் திசைமாறும் என்று சொல்ல
 நம்மாலே முடியாது; நல்ல இன்ப
நிதிஎன்று நமைச்சேரும்? என்றே நம்மால்
 நினைத்திடவும் முடியாது; நிலையை வெல்ல
மதிஎன்னும் மாசக்தி காட்டு கின்ற
 மார்க்கத்தில் சென்றாலும் மீட்சி உண்டோ?

பறவைகளோ பறந்திருக்கும் இரையைத் தேடி!
 பசிமுடிந்தால் மகிழ்ந்திருக்கும் இசையைப் பாடி,
கறவைகளோ கறந்திருக்கும் கன்றை நக்கி!
 கண்களிலே தாய்மைஒளி கனிவைத் தேக்கி!
மறம்படைத்த விலங்கினத்தின் நோக்கம் ஒன்றே!
 வரவிருக்கும் நாளைஎனும் ஏக்கம் எங்கே?
அறிவுள்ள மனிதரென்பார்; அவரைத் தேடி
 அப்படிஏன் வருகிறதோ கவலை கோடி!

மண்ணடியில் கடலைதனைப் புதைத்து விட்டால்
 மறுநாளே முளைகிளம்பும்! பயனை நல்கும்.
மண்ணடியில் உடல்தனையே புதைத்து விட்டால்
 வந்துவிடும்! பதில்சொல்ல முடியுமோ காண்!
பொன்னாலே உடல்முழுதும் பூட்டி வைத்து
 புவியினிலே காத்தாலும், உயிரும் போன
பின்னாலே என்னபயன்? இருக்கும் போதே
 பயனின்றி வாழ்வதிலே என்ன லாபம்?

இனிக்கின்ற பாடல்களைப் பாடி ஞலும்
இறுதியிலே இதயமதில் நிற்ப தென்ன?
அணைக்கின்ற பெண்சுகத்தின் அடுத்த கட்டம்,
ஆவலெல்லாம் அகன்றதுமே முடிவு என்ன?
நினைக்கின்ற எல்லாமே நிகழ்ந்து போனல்
நிழல்போலத் தொடர்வோனின் நிலைமை என்ன?
தணியாதத் தாகத்தைத் தீர்க்கும் தண்ணீர்
தணித்தபின்னே தானடையும் பெருமை
போல்தான்! . 22

வகிடெடுத்து முன்முடியால் மறைத்த போதும்
வழுக்கைதனை எத்தனைநாள் மறைக்கக் கூடும்?
பகட்டான உடையாலே கிரந்திப் புண்ணை
பாருக்கே எத்தனைநாள் மறைக்கக் கூடும்?
இகத்தாரைப் பொய்சொல்லி ஏய்த்தா லும்தான்
இதயத்தை எத்தனைநாள் ஏய்க்கக் கூடும்?
அகிலத்தில் ஆண்டவனும் இருக்கின் ருன்காண்!
அவன்இடமே மனசாட்சி, அவனே சாட்சி! 23

பிந்தைமிகு இதயத்தின் விளையாட் டெல்லாம்
விடுகதைதான்; சுடுநீர்தான்; புதைசே றும்தான்,
ந்தையிலே மாடுகளாய் திரியும் எண்ணம்
சமுத்திரத்து நண்டுகளாய் பயந்தே ஓடும்
ந்தயத்துக் குதிரையெனப் பாயும்; வெய்யில்
படும்மணலில் கழுதையென புரளும்; பீற்றல்
ந்தையிலே காணுகின்ற ஓட்டை போலே
காலமெலாம் தான்கசங்கி செழுமை காணும்! 24

வேற்றாளின் முகம்கண்டு குலைக்கும் நாய்போல்
விரும்பாத செயல்நடந்தால் குலைக்கும் நெஞ்சம்!
மாற்றாரின் முகம்கண்டு சிணுங்கும் சேய்போல்
மற்றவர்கள் உயர்வுக்கே மயங்கும் நெஞ்சம்,
தேற்றிடினும் குழந்தைஅழ, துவளும் தாய்போல்
தேறுதலில் ஆறுதலில் தேறா நெஞ்சம்,
காற்றோடு போகின்ற உயிரின் கூட
காலமெலாம் வாழ்வதுபோல் கலங்கி வாழும்! 25

தோல்உரிக்கும் பாம்பாக மனதை மாற்றி,
தோட்டத்து ஏற்றமென இறக்கி ஏற்றி,
பால்குடிக்கும் பூனையெனப் பதுங்கிப் பாய்ந்து,
பணந்தேடச் செல்கின்ற பாதை தன்னில்
வால்இழந்த நரிபோல வடிவம் மாற
வைகைநதி ஊற்றாகத் துயரம் மீற,
தேள்கடித்தத் திருடன்போல் துடிக்கும் போது,
தேம்புகின்ற வாழ்க்கைதனை தேற்றுவார் யார்? 26

முட்டையிலே கருவிருந்தால் மட்டும் குஞ்சு
முழுதாக வந்துவிடும் என்ப தில்லை!
பட்டத்திலே நூலிருந்தால் மட்டும் வானில்
பகட்டாகப் பறந்துவிடும் என்ப தில்லை!
பெட்டியிலே பணமிருந்தால் மட்டும் வாழ்வு
பேரின்பம் தந்துவிடும் என்ப தில்லை!
இட்டமுடன் அவன்என்ன எழுதி வைத்தான்
என்பதில்தான் இயல்பாக நடக்கும் எல்லாம்!

அசைபோடும் பசுமாடாய், அறிவைத் தந்த
ஆண்டவனை நினைக்கின்றேன்; ஆசை யோடு
இசைபாடும் பூங்குயிலாய் அவனின் பேரை
இன்பமுடன் பாடுகின்றேன்! கிளைகள் தோறும்
விசையோடு தாவுகின்ற அணிலைப் போல
விளையாடும் அவன்செயலில் மகிழ்கின் றேன்நான்.
திசைக்கருவி காற்றடிக்கும் திசைகள் தோறும்
திரும்புதல்போல் அவன் திசையைத் தொழுகின்
றேன்நான். 2

இரவுக்கும் பகலுக்கும் மாற்ற மில்லை
எழிலார்ந்த சூரியனும் இல்லை யென்றால்!
விறகுக்கும் உடலுக்கும் பேத மில்லை,
வீற்றிருக்கும் உள்உயிர்தான் விரைந்தே போனால்!
வரவுக்கும் செலவுக்கும் மட்டு மிந்த
வாழ்க்கையிலை; வளர்பிறைபோல் பெருகும் இன்ப
உறவுக்கும் உள்ளுணர்வின் வளர்ச்சிக் குத்தான்!
உலகமெலாம் உயர்ந்தோரின் உள்ளந் தானே! 29

குழந்தையெலாம் தாயிடத்தே காட்டும் அன்பு!
கூடும்சுவை ஞோற்றினிலே காட்டும் ஆர்வம்!
அழகியதோர் பொம்மையினை அணைக்கும் ஆசை!
அடுத்தடுத்து அதைஎண்ணி சிலிர்க்கும் நெஞ்சம்!
பழகுகின்ற மற்றவர்மேல் கொள்ளும் பாசம்,
பக்திக்கும் இவைபொருந்தும். பக்தி என்றால்
குழந்தையெனும் மக்களுக்கும் 'கடவுள்' தாய்க்கும்
கூடிவரும் அன்பென்னும் கொடுக்கல் வாங்கல். 3(

முயலிடத்தே வெற்றிபெற்ற ஆமை போல,
முதலையிடம் தப்பிவந்த குரங்கைப் போல,
துயர்சூழ்ந்த வாழ்க்கையிலே உறுதி வேண்டும்!
துயர்வந்தால் தப்பிவரும் துணிவு வேண்டும்!
உயர்வான உண்மைதனை ஒழுக்கம் தன்னை,
உள்ளத்தின் தெளிவுதனை ஊக்கம் தன்னைத்
தயவாகத் தந்துவிடும் சக்தி ஒன்றே!
சான்றோர்கள் அதைஅழைப்பார் பக்தி என்றே! 31

வண்ணங்கள் நிறையவரும் வானம் ஒன்றே!
வாழ்வினிலே அமைதிதரும் ஞானம் ஒன்றே!
எண்ணங்கள் கோடிவரும் இதயம் ஒன்றே!
என்றாலும் அதிலிருக்கும் ஏக்கம் ஒன்றே!
தண்ணீர்போய் தான்தங்கும் இடத்திற் கேற்ப
தனிவடிவு கொள்வதுபோல் அறிவு வாழும்!
வெந்நீரால் வீடெல்லாம் வெந்து போமோ?
வெகுண்டுவிடும் அறிவெல்லாம் அஃதே
போல்தான்! 3

குளந்தன்னை சேறாகக் கலக்கி விட்டு,
கூடையிலே மீன்பிடித்துக் கொள்வார் போல,
உளந்தன்னை நம்இறைவன் கலக்கு கின்றான்,
உண்மைஎனும் மீன்பிடிக்க! சேற்றுக் குள்ளே
தளம்பரப்பித் தான்வாழும் ஆறுமீன் போல்
தரணியில்வாழ் மக்கள்தமை மறைத்துக் கொள்
வளம்காண பேரிறைவன் விதியை ஏவி
வெளிக்கொணர ஆணையிட்டான். விதியோ
தேடும்!

பாட்டியிடம் வடைதிருடி, நரிஇ டத்தே
பறிகொடுத்த காக்கையென, வாழ்க்கை தன்னில்
போட்டியிட்டே வாழ்கின்றார் பொருள்இ ழந்தே,
பொறுமையிலே அவருக்கோ தன்னைப் பேண!
மீட்டாத வீணையென் மனதை மூடி
மெழுகாகக் கவலையிலே உருகும் போது,
சாட்டையிலே அடிவாங்கும் தேகம் போல,
தணல்மேலே புழுவாகத் துடிப்பார் மக்கள்! 34

மலராக அசைகின்றான் இறைவன்; நல்ல
மழையாகப் பொழிகின்றான் இறைவன்; வீசும்
நிலவாக வருகின்றான் இறைவன், நம்மை
நிழல்போலத் தொடர்கின்றான் இறைவன் தன்னைப்
பலநாளும் ஏமாற்ற முயலு கின்றோம்!
பைத்தியம்போல் பணப்பித்தால் திரிகின் றோம்நாம்
அலகில்லா கிளியொன்று கொட்டை தின்ன
ஆசையுறும் நிலையினிலே வாழ்கின்றோமே! 35



மானிட சாதியே வாருங்கள்—ஒரு
மார்க்கம் உண்டு உய்யக் கேளுங்கள்!
கானலைப் போன்றதிவ் வாழ்க்கை—அதில்
காதல் கவர்ச்சியைப் பாருங்கள்!
தோணியைப் போல்கால வெள்ளம்—தனில்
சேர்ந்துநாம் செல்வதைக் காணுங்கள்!
ஊனுக்கும் உயிருக்கும் பந்தம்—உள்ள
உலகத்தில் நமக்கெலாம் எத்தனை சொந்தம்!

ஆதியில் வந்தது தேகம்—அதில்
அடைப்பட்ட இதயமோ கைசிறு பாகம்!
பாதியில் செழித்தஅப் பாகம்—முழுப்
பாதையை மறைத்திட, பணிந்தது தேகம்,
காதலைத் தந்தது மோகம்—வந்து
கலந்தது எண்ணமோ கொண்டது வேகம்!
ஆதியில் தோன்றிய தேகம்—ஒரு
அடிமைக்கு அடிமையாய் ஆனதே பாவம்!

வேதனை எண்ணுமோர் நஞ்சு—புது
வேடத்தில் வந்ததே மாற்றுருக் கொண்டு,
காதல் எனும் பெயர் தாங்கி—புதுக்
காட்சியைத் தந்ததே உணர்ச்சியில் ஓங்கி.

போதை அதுதரும் சாரம்—அந்தப்
போதையும் மீறினுல் வாழ்க்கையின் ஓரம்
மேதையும் வீழ்ந்தே கிடப்பார்—எனில்
மேதினி மக்களை யாரினி காப்பார்?

எண்ணத் தெரிந்திடும் மக்கள்—நெஞ்சில்
எண்ணத் தொலையாத எண்ணத்தின் சிக்கல்,
வண்ணம் விரும்பிடும் கண்கள்—இந்த
மண்ணையும் காணுமல் வைக்கின்ற பாங்கில்
கண்ணைக் கருத்தைக் குழப்பும்—இந்தக்
காதல், அடிமனக் கவர்ச்சியை உசுப்பும்.
பண்ணத் தெரிந்தவர் பாய்ந்தார்—அங்கு
பாய்ந்தவர் நிமிடத்தில் பலமெலாம் ஓய்ந்தார்!

பாதை தவறென்று புரியும்—ஒரு
பாபமே இதுவென்று எண்ணமும் அறியும்.
பேதை மனமென்று இகழும்—'சீ
பேசாமல் இரு'என்று நல்மனம் உமிழும்;
காதைப் பிடித்ததை முறுக்கி—கல்விக்
காரணம் காட்டியே கவனத்தை மாற்றும்.
வாதை கொடுக்கின்ற காதல்—அங்கு
வாலாட்டி பின்னுேடி மீண்டும் குலைக்கும்!

பெற்றஓர் அனுபவம் போதும்—பிறர்
பேசிடும் அனுபவம் கேட்டாலும் போதும்!
கற்றஓர் அனுபவம் போதும்—பிறர்
கண்ணீர் விடுகின்ற காட்சியும் போதும்!
உற்றவர் போல்வந்து ஓதும்—காதல்
உயிரினை அறுக்கின்ற முறையுடன் மோதும்!
முற்றிலும் கைகட்டி ஆடும்—அடி
முட்டாள் மனம்,நின்று பேயாட்டம் போடும்.

காதல் எரியாத நெருப்பு—அதில்
கைபட்டால் போதுமே கருகிடும் சிரிப்பு!
காதல் அணையாத நெருப்பு—அதன்
கண்பட்டால் போதுமே மண்படும் சிறப்பு!
காதல் மறையாத நெருப்பு—இந்தக்
காசினி தன்னையே எரித்திடும் பொறுப்பு
காதலைப் படைத்தவன் குறிப்பு—எனக்
கண்டவர் விண்டவர் பெற்றதோ இழப்பு!

தேகத்திற்கு (அ)ச்சுவை வேண்டும்—எனில்
தேடிய அச்சுவை சுமையாக லாமோ?
தாகத்திற் குத்தண்ணீர் வேண்டும்—அந்தத்
தண்ணீரே குடலினைக் கிழித்திட லாமோ?

மேகக் குவியலைக் கண்டு—இன்ப
மெத்தையாய் எண்ணியே படுப்பவன் மண்டு
போகக்கதை இதைக் கூறும்—நல்ல
புத்திப் புகட்டினும் யார்க்கது ஏறும்?

உணவுக்கு உப்பினைச் சேர்ப்பார்—சுவை
உணர்வுக்கு உறுசுவை ஊட்டவே கேட்பார்!
உணவாக உப்பையே கேட்டால்—அந்த
உருப்படா நாக்கினை சீயெனப் பழிப்பார்!
தினவுக்குக் காதலே வேண்டும்—அதைத்
தினசரி கடமையாய் தீராது கேட்டால்?
உணராத மக்களே மாய்ந்தார்—அந்த
உன்மத்த மனிதரை யார்மாற்றப் பார்த்தார்?

குறுகுறு எனவரும் நினைவு—கனி
குடைந்திடும் வண்டெனத் துளைத்திடும் நெஞ்சை
சிறுசிறு கோர்வையில் கனவு—ஒளி
சிதறுதல் போல்வரும் சிலிர்த்திடும் சிந்தை!
சுறுசுறுப் பாயுள்ள மூளை—புது
சோம்பேறித் தனத்திலே சொகுசாய்க் கிடக்கும்!
வரவர மாமியார் கழுதை—ஆன
வகையினைப் போலவே வாழ்வதும் நடக்கும்!

வாழ்வுக்கு வேண்டிய நோக்கம்—தனே
வடிகட்டிக் கடைகட்டி மண்ணுக் கனுப்பும்.
வாழ்வுக்கு வேண்டிய ஊக்கம்—தன்னே
வாழாமல் செய்தங்கு பின்னுக் கழுத்தும்.
தாழ்வுக்கு வேண்டிய தூக்கம்—தன்னே
தாராள மாகவே தானம் கொடுக்கும்.
பாழாகப் போனுலும் வாழ்வு—ஆசை
பரவாயில்லே என்று பசப்பியே கெடுக்கும்!

கருமுகில் கண்டாடும் மயிலாய்—மனம்
காதல் நினேவிலே நின்ருடும் ஒயிலாய்!
வருமின்ப நினேவையே உணவாய்—உண்டு
மதிமாறிக் கிடக்குமே விழிமூடி நிலேயாய்!
பெருந்துன்பம் காதல்முன் பறக்கும்—துன்பம்
பெருகினுல் ஊழ்வினே தன்னேயே அழைக்கும்!
ஒருமுறை உறவெண்ணிச் சிரிக்கும்—நெஞ்சு
உடலுக்குள் களேப்பையும் களிப்பெனக் கொடுக்கும்.

படத்திலே பாம்பினேக் கண்டால்—ஆகா
பார்வைக்கு அழகென்றே புகழ்கின்ற பேர்கள்
தடத்திலே பாம்பினேக் கண்டால்—நிலே
தடுமாறி உளறியே தாவிக் குதிப்பார்!

"புடமிட்டப் பொன்னென்று காதல்—தன்னைப்
போற்றுவார் அத்தனைப் பேர்களும் ஓர்நாள்
இடம்மாறி காதலில் வீழ்ந்தால்—அவர்
ஏற்கின்ற இன்னலோ எத்தனை கோடி!"

காதலைத் தெரியாத நெஞ்சம்—சுவைக்
கற்பனை தன்னிலே கண்டிடும் இன்பம்!
காதலைத் தெரிகின்ற நெஞ்சம்—அதைக்
கவ்விட முயன்றிடும். கவ்வினால் இன்பம்!
காதலைப் புரிகின்ற நெஞ்சம்—இது
கனல்மிகு பாறையில் வெண்ணெயைப் போல
சேதமுற்றே நிலை மீறும்—இந்த
சேதியை உணர்ந்தாலும் யார்மனம் மாறும்?



## மனக் கூத்து

ஏதையோ நினைத்து ஏங்குதே என்மனம்!
எதற்கென அறிகிலேன்; இதுபெருங் கொடுமை!
நிம்மதி என்றுநான் நினைத்திடும் வேளையில்
விம்மிய குரலில் கனைத்திடும் உள்மனம்!
புரியா மொழியில் புலம்பிடும் போது
தெரியா மல்நான் தியங்குகின் றேனே!
'என்னவோ' செய்து எத்தனை பெரினும்
'இன்னும்' என்றால் எங்கே போவது?
இன்னும் என்பது எத்தனைக் கோடியோ?
மின்னும் பொருளோ? விண்ணோ? புவியோ?
கண்ணைச் சுருக்கி, கருத்தை மயக்கி,
வண்ண-முகத்தை வரிவரி யாக்கி,
சோக முத்திரைக் குத்திடும் செயலில்
தேகம் எத்தனை துயரையே தாங்கும்?
போதும் மனமே! புலம்பிடும் உனையே
பாது காத்திடும் பலமெனக் கிலையே?
படைத்தநல் லிறைவா! பாவிக்கு ஒருவரம்!
கொடுத்தஇம் மனதைக் கொண்டுபோ! வேண்டாம்!!





## விழுந்த நெஞ்சம்!

குறைவிலா உடலைத் தந்தாய்!
குறைவிலே நிறைவைத் தந்தாய்!
மறைபொருள் உணரும் வண்ணம்
மாண்புடன் மதியைத் தந்தாய்!
இறைவனே! உன்னை எண்ணும்
இனியதோர் இதயம் தந்தாய்!
கறையுடை வாழ்க்கை யேனைக்
காப்பதுன் பாரம் ஐயா!

ஆசைகள் நெஞ்சில் கோடி!
அவைநிறை வேற வில்லை!
ஓசைகள் நெஞ்சில் கோடி!
உணரவே முடிய வில்லை!
மாசுடன் வாழ்வை ஓட்டும்
மனிதனாய் படைத்தாய், என்னை
கூசியே கேட்கின் றேன்நான்,
குழந்தைநான்! காக்க வேண்டும்!

உடலிலே உறுதி வேண்டும்.
உறுதியில் தெளிவு வேண்டும்.
நடையிலே பொலிவு வேண்டும்.
நாளெலாம் வலிவு வேண்டும்.
இடையிலே இன்னல் வந்தால்
ஏற்றிடும் இதயம் வேண்டும்.
தடைகளை மீறிச் செல்லும்
தைரியம் வேண்டும்! வேண்டும்!!

நன்றியை எண்ணி வாழும்
நல்லதோர் நினைவு வேண்டும்!
தொண்டுசெய் உள்ளம் வேண்டும்!
துணையெனப் பொறுமை வேண்டும்!
அன்புடன் பிறரைக் காத்து
அனுசரித் துதவ வேண்டும்!
என்பினைத் தந்த தேவா!
என்னுடன் தினமும் வா!வா!

அமைதியில் வாழும் நெஞ்சம்
ஆண்டிட வேண்டும் என்னை!
குமுறினல், தாழ்வு கொண்டால்,
கும்பிட வேண்டும் உன்னை!
திமிரிலே அறிவு சென்றால்,
தீய்த்திடும் பண்புக் கண்ணே!
இமைகளே விழியைக் காக்கும்!
இறைவனே வழியைக் காப்பாய்!

என்பிழை பொறுப்பாய்! ஏழை
இன்னலைத் துடைப்பாய்! என்றும்
தெம்பினை அளிப்பாய்! சிந்தை
தேர்ந்திட வளர்ப்பாய்! நல்ல
பண்பினைக் கொடுப்பாய் என்றே
பாசத்தில் கெஞ்சு கின்றேன்!
உன்திரு உறவே வேண்டும்!
உனையன்றி உதவுவார் யார்?

# தொடரும் கதை!

எட்டியவள் கைபிடித்தேன்! 'இதற்கா' என்று
ஏக்கமுடன் கண்மொழியில் என்னைக் கேட்டாள்?
கட்டியவள் தோள்மீதில் தலையைச் சாய்த்தே
காதருகே என்னிதழைக் கொண்டு போனேன்.
ஒட்டியுற வாடிவரும் இரண்டு உள்ளம்
உடலோடு துணைதேடும் உவகை தன்னை
எட்டிக்காய் கதையென்று எண்ணிக் கொண்டாய்!
என்கையின் அணைப்பாலே 'இதனைச்' சொன்னேன்

பேச்சில்லை! பெருமூச்சைப் பதிலாய் தந்தாள்!
பிறகென்ன வெறுப்பென்றேன்! பொறுமை
என்றாள்.
கூச்சமில்லை 'இதைக்கொள்ள' குழப்ப மில்லை,
கொண்டவரின் கருத்தினுக்குத் தடையே யில்லை.
கீச்சென்று மூச்சென்றுக் கூவிக் கொண்டு
கிளிபோல மொழியாடும் குழந்தைச் செல்வம்
ஆச்சன்றே பத்தாக! அதனைக் கண்டும்
அருகினிலே வந்தீரே ஆசை மொண்டு!

தொட்டிலிலே ஒன்றுறங்கும்! துவண்டு எந்தன்
தோள்களிலே ஒன்றுறங்கும்! துணிந்த ஒன்று
கட்டிலிலே போயுறங்கும்! கவிழ்ந்து எந்தன்
கால்களிலே ஒன்றுறங்கும் கவனித் தீரோ?

ட்டியலில் இல்லாத ஆறும் எங்கோ
பறந்தோடிப் பாய்ந்துவந்து கூச்சல் போடும்!
கெட்டகனு கண்டதுபோல் உறக்கம் நீங்கி
ல்அரைக்கும் எந்திரம்போல் கதறும் எல்லாம்

பத்தினியாய் நான்புகுந்தேன், பத்தே மாதம்
பறப்பதற்குள் தாயானேன்! பிறந்த சேயால்
நித்திரையை நானிழந்தும் ஓய்வே இன்றி
நிறைமாதம் ஆனேனே அடுத்த ஆண்டில்!
மெத்தையிலே படிபோல பிறந்தார் மக்கள்,
வெட்கமென்ன! ஏன் முகத்தைத் திருப்புகின்!
புத்திமதி போதுமடி கண்ணே என்று
போனேன்நான் பின்னாலே அவளும் வந்தாள்!

தெரியாதா இக்கதைதான்! தெரிந்து தானே
செய்கின்றோம் இத்தவறை இயற்கை தானே!
புரியாமல் இருந்திருந்தால் இந்நேரம் நான்
புலிபோல பாய்ந்திருப்பேன், கேளாய் பெண்ணே!
சரியாக பதவியிலே உயர்ந்தேன்(!) வாங்கும்
சம்பளத்தில் உயர்வென்றே சொல்ல வந்தேன்!
வாயாத கண்மலரால் விழுங்கு கின்றாள்,
விடியும்வரை கதைதொடரும் தடையோ இல்லை!

## சுமையான சுவை

வாய்மணக்கக் கதைபேசி வலைகள் வீசி,
வாலிபத்தின் கதைமணக்கக் கைகள் பூசி,
பாய்மணக்க மலர்தூவி பார்த்துப் பார்த்து,
பாவைதனை உடலோடு சேர்த்துச் சேர்த்து,
தோயும்இதழ் தேன்மணக்கத் துடிக்கும் தேகம்
தொட்டாட, காதல்சுகம் தொடர்ந்து ஆட,
தாய்சுமப்பாள் தன்மகவை பத்து மாதம்,
தகப்பனுக்கோ அச்சுமைதான் ஆயுள் காலம்!

ஆராரோ பாடுவது அவளுக் கின்பம்!
அணைத்தெடுத்துப் பாலூட்டல் அதிலும் இன்பம்
பாரீரோ நம்குழந்தை என்றே கூறி
பழம்போல கன்னமதைச் சுவைத்தல் இன்பம்!
தீராத துயரமதைத் தீர்க்கும் இன்பத்
தேன்குடத்தைத் தன்னிடுப்பில் அவள் சுமக்க,
போராடும் சிந்தையுடன் பொருளைத் தேடும்
பொய்வழியின் போதைதனை சுமப்பான் தந்தை!

தன்னையொரு சுமையாக நெஞ்சம் எண்ண,
தனிமையொரு சுமையாக அவனைக் கிள்ள,
பின்னையொரு பெண்வந்தாள் மனைவி யென்றே!
பேரின்பச் சுவையோடு போதை துள்ள.

அன்னையெனும் அருட்சுமையை அவளுக் கீந்தான்!
அவள்தந்தாள் எழிற்சுமையை குழந்தை என்றே!
இன்னுயிரில் பிழிந்தெடுத்த இன்பச் சாற்றை
"ப்படித்தான் காத்திடுவேன்" என்பான் தந்தை!

மெய்சுமக்கும் நாட்களிலே நினைவில் ஆடி
மேனிசுகம் கண்டுருக மகிழும் அன்னை,
கைசுமக்க விளையாடும் காதல் பிள்ளை
கால்சுமக்க நடைபோடும்! காலம் செல்ல,
பொய்சுமக்கும் புவிமீதில் உயிரைக் காக்கப்
புண்சுமக்கும் தந்தைமனம்! வளரும் பிள்ளை
செய்தொழில்கள் வெற்றிபெறத் தந்தை யென்பான்
சிந்தையிலே துயர்சுமப்பான் ஆயுள் எல்லாம்!



# ஆசைக் கோளாறு

கோபுரம் போலவே கட்டிய கொண்டையில்
கொத்தோடு பூமணக்க—சிறு
தீபம் எரிவது போலவே குங்குமத்
திலகமும் தான்சிவக்க;

மீனுக்கு வாலெனத் தீட்டிய மையெழில்
விழிகளில் வாள்கொடுக்க—குடத்
தேனுக்கு ஈடாகும் கொவ்வை இதழ்களில்
சாயமும் தான்சிரிக்க;

சங்குக் கழுத்தினில் தங்கி அசைந்திடும்
சங்கிலி தான்ஜொலிக்க—அதை
எங்கென்று ஏங்கியே தேடுதல் போலவே
இணையெழில் முன்னிருக்க;

மூடாமல் மூடியே ஆடைஎனும் ஒன்று
மேனியைக் காத்திருக்க—அங்கம்
ஆடாமல் ஆடியே கையில் வளையலை
ஆட்டி அசைத்திருக்க;

ஒப்பனை சாமான்கள் உள்ளே உறங்கிடும்
உல்லாசப் பையிருக்க—மிக
அற்புத மாய்கைக் குழந்தையைப் போலவள்
அழகிய தோள்சுமக்க;

ஓங்கி உயர்ந்தவோர் குதிகால் செருப்புடன்
ஓரடி கால்நடக்க—இடை
ஏங்கி அசைந்திட மேனி குலுங்கிட
எல்லாமே சேர்ந்திருக்க;

கண்ணைக் கவரும்பொன் சேலை உடுத்தியே
கன்னித்தேர் புறப்பட்டதே—மனம்
விண்ணை இடித்திட கற்பனை விண்டிட
வீதியில் நடந்திட்டதே!

பள்ளிக்குச் செல்கிறுள் படிக்கவா! இல்லையே
படித்துக் கொடுப்பதற்கா—பேரப்
பிள்ளைகள் படிப்பதைப் பார்த்திடச் செல்கிறுள்,
பிறகென்ன விழிப்பதும்ஏன்?



## உணராத மக்கள்!

ஈடில்லா அழகென்றே தன்னை எண்ணி,
இருக்கும் வரை கண்ணாடி முன்னே நின்று,
ஆடையிலா ஆடைதனை உடம்பில் சேர்த்து
அலங்காரம் செய்வதற்கோ நிமிடம் நூறு!
வாடையெலாம் சுற்றிவரும், 'வகைகள்' பூசி
வாயெல்லாம் பல்லாகக் கதைகள் பேசி,
கோடிதரம் சினிமாவின் பெயரைக் கூறி,
கோலமுடன் புறப்படுவார் கவர்ச்சி மீறி!

அரசாங்கப் பேருந்தில் அவதிப் பட்டு,
அலங்காரம் அதற்குள்ளே கலைந்து கெட்டு,
நெரிசலிலே வியர்வையெலாம் நிரம்பிக் கொட்ட,
நின்றபடி ஆட்டமெலாம் நிறைய ஆடி,
திரைஅரங்கைச் சேர்வதற்கும், சீட்டுவாங்கிச்
சிரிப்புடனே செல்வதற்கும் நிமிடம் நூறு!
முறையோடு உட்கார்ந்து படத்தை எல்லாம்
முழுதாகப் பார்ப்பதற்கோ மணியும் மூன்று!

சிந்தைதனை சினிமாவில் சேர்த்த நேரம்,
தேர்போல அலங்காரம் செய்த நேரம்,
சந்தையெனப் பேருந்தில் சிதைந்த நேரம்,
சாலையிலே பிறர்காண மகிழ்ந்த நேரம்,
மந்தையென திரைஅரங்கில் வதிந்த நேரம்,
மற்றதையும் சேர்த்தாலோ காலம் மீறும்,
விந்தையிதே படம்முடியும் வேளை தன்னில்
வீற்றிருக்க முடியாமல் விரையும் நேரம்?

பாடுகின்ற தேசியத்தின் கீதம் கேட்டுப்,
பணிவோடு அமைதியுடன் நின்று, இன்பம்
சூடுகின்ற நாட்டுப்பற்று எவர்க்கும் இல்லை!
தொல்லையென அவர்நினைத்தால் தரமே இல்லை!
கூடுகின்ற போதில்பெறும் குளுமை இன்றி,
குவிந்திருக்கும் நெல்லிக்காய் கலேதல் போல
ஓடுகின்றார் நாட்டிசைதான் இசைக்கும் போது!
உணராத மக்கள்இவர் நடத்தை தீது!

நம்நாடு, நம்தேசம், நமது கீதம்
நம்ஆட்சி, நம்மவர்கள் மாட்சி என்ற
தம்நினைவு இல்லாமல் சுயந லத்தால்
தழைத்துவிட்ட மக்களெல்லாம், தகுதி யுற்று
"நம்நாடு, நாமெல்லாம் அதனின் மக்கள்
நன்றியுடன் பணிசெய்வோம்" என்றே எண்ணும்
செம்மையில்தான் பாரதமும் சிறக்கும். இன்றேல்
சீரழியும் அவர்செயலால்! 'உணர்வார் யாரோ'?



## நாடென்றால் நாம்தான்!

நாடென்று உணராத நாட்டு மக்கள்
நாலாயி ரங்கோடி வாழ்ந்தால் என்ன?
ஏடென்று மதிக்காமல் இழிவாய் பேசி
எறிகின்ற படித்தவர்கள் இருந்தால் என்ன?
வீடென்று புரியாமல் இடித்துப் போட்டு
வெட்டவெளி தனில்வாடும் மக்கள் தம்மை,
கூடொன்றைச் சுமக்கின்ற நத்தை என்றே,
கூறாமல் வேறென்ன சொல்லத் தோன்றும்?

மொழிச்சிக்கல் அதனாலே மூண்ட சிக்கல்,
முதிர்ந்திருந்த ஒற்றுமையை மாய்த்துப் போடும்
வழிச்சிக்கல் ஆகிவிட, வாய்ப்பை எண்ணி
வளைந்திருந்தோர் நிமிர்ந்தாரே கலகம் மூட்ட!
விழிகளுக்குக் கண்ணாடி கருப்பாய் போட்டு
விளங்குவன எல்லாமே கருப்பே என்று
மொழிகின்றார் தலைவரெலாம். ஆமாம் என்று
முடிவெடுத்து ஆடுகிறார்! மக்கள்! பாவம்!

பகைக்கூட்டம் எல்லையிலே! பாய எண்ணம்
பாகிஸ்தான் நடுவினிலே! பிரிவு என்னும்
புகைமூட்டம் நமக்குள்ளே! பிரித்துப் பேசும்
புன்குணத்தார் பேச்சாலே நாட்டில் இன்று
திகைப்பூட்டும் அளவுக்கு செயல்கள் எல்லாம்
சீறிவர, பாரதத்தின் செழிப்பை வாட்டும்
வகையினிலே வாழ்கின்றோம். வாழ வேண்டின்
வழியொன்று நாம்காண வேண்டும் வேண்டு

ாலமெலாம் போராடி, ஒன்ருய் கூடி
ண்போன்ற சுதந்திரத்தைக் காண வாடி,
ஞாலமெலாம் வாய்பிளக்க, ஞாயிறைப் போல்
நாம் பெற்ரும் சுதந்திரத்தை! நல்லநாளை
கோலமயில் போல்வைத்துக் கொலுவில் ஏற்றிக்
நம்பிட்டுக் காத்திருக்கும் கருத்தே இன்றி,
காலமென்ன கத்தியுடன் கழுத் தறுக்கக்
நடுகிவரும் நம்மவரின் கொடுமை என்னே!

பேசுகின்ற மொழியாலே பிளவு வேண்டாம்!
பிரிக்கின்ற வழிகாட்டும் பேச்சும் வேண்டாம்!
ஏசுகின்ற போக்காலே புகழை ஈட்டும்
ஈனமதி யாருக்கும் வேண்டாம்! வேண்டாம்!
நேசமுடன் நம்நாட்டின் பெருமை ஓங்க,
நிலவுகின்ற ஒற்றுமையின் வலிமை தேங்க,
பேசுகின்ற பெரியீரே! செயல்கள் செய்வீர்!
பெரிதல்ல பேசும்மொழி! பாரதம் தான்.



## நமது நிலை!

'கல்லாமை' பேய்பிடித்தே, கலங்கும் போது
'கட்சி'யெனும் கள்கொடுத்துப் போதை யேற்றி,
'இல்லாமை' மேடையிலே ஆட வைத்தே
எந்நாளும் மக்கள்தமை மனம்போல் ஆட்ட,
பொல்லாத காலமெனப் புலம்ப வைக்கும்
பொய்மொழியைப் பொழிகின்ற தலைவர் கூட்டம்
வல்லாயுதம் ஒன்ருய் வாழ்வில் கொள்ள
வதையாகும் வளநாடும் மக்கள் தாமும்.

தாய்நாட்டுப் பற்றில்லை—தன்னைக் காக்கும்
தாய்மொழியில் பற்றில்லை; தினமும் பேசும்
வாய்மொழியில் மெய்யில்லை; நாட்டைச் சூழும்
வாழ்வுபெறும் வகையில்லை; நாட்டை ஆளும்
நோய்நொடிக்கு மருந்தில்லை; நிறைவ யிற்று
நிம்மதிக்கும் உணவில்லை, இருப்ப தொன்று
நாய்போல நம்மினத்தைப் பார்க்கும் போதே
நகைக்கின்ற, குலைக்கின்ற வேலை தானே!

பிறநாட்டைப் பார்ப்பதற்கே ஆசை; அந்தப்
பிறநாட்டின் மொழிபேச ஆசை; பின்னும்
பிறநாட்டார் போல்வாழ ஆசை கொண்டு
பிறந்தஒரு பொன்னுட்டின் பண்பைப் போக்கும்
அரைமேனி உடையோடு ஆண்கள் தம்மை
அங்காடி வீதியிலும் அணைத்துப் போகும்.
குறைசெயலைப் பின்பற்றிக் கெட்டே போகும்
கொடுமையிலே நம்மகளிர் குளிப்பார் நின்று!

றநாட்டில் எத்தனையோ பெருமை உண்டே!
பின்பற்ற நினைப்பாரோ? முயலு வாரோ?
றக்கின்ற நிலையினிலும் அடிமை மோகம்
பெருகிவரின் இந்நாட்டின் பெருமை மாயும்!
றக்கின்ற சிறகுதனைப் பாழ்ப டுத்தி
பறந்தோட முயல்கின்ற பறவை போல,
மறக்கின்ற தாய்நாட்டின் நினைவில் இங்கு
மறைகிறதே பெருவளமும் பயனும் எல்லாம்! 4

எண்ணமதில் தாய்நாட்டின் எழுச்சி வேண்டும்!
இளைஞருக்கோ இதயமதில் வியப்பு வேண்டும்!
திண்ணமுடன் தொண்டாற்றும் உணர்ச்சி வேண்டும்!
தேசத்தின் புகழ்காக்கும் வளர்ச்சி வேண்டும்.
வண்ணமுடன் ஒற்றுமையை வளர்த்தே ஓங்க,
வளர்கின்ற இளைஞர்களை வருங்கா லத்தே
தன்மையுடன் பணியாற்றச் சேர்க்க வேண்டும்,
காயகமே நம்மூச்சு...தொண்டால் காப்போம்! 5



## உதைக்குந் தருமம்!

புரியாத மக்களையா இந்த மக்கள்!
புரிந்திருந்தால் இப்படியா புலம்பி வாழ்வார்?
நரியாக நிலைமாறி விலையை ஏற்றும்
நாய்குணமே படைத்தவரைப் பிடித்து வந்து
கரும்புள்ளி செம்புள்ளி முகத்தில் குத்தி,
காண்பவர்கள் எல்லோரும் காரித் துப்ப
ஒருநாளில் ஒருவரையே உதைத்தார் என்றால்
ஒழியாதோ பொருள் தனையே பதுக்கும் வேலை! 1

சலியாத மனங்கூட சலித்துப் போக,
சண்டாளர் விலையேற்றி கலப் படத்தால்
கலக்காத பொருளையெலாம் கலந்து வைத்தே
கச்சிதமாய் விற்கின்றார், இதனைக் கண்டு
புலியாக வீட்டினுள்ளே பாய்ந்து என்ன?
புயலாக தனக்குள்ளே சீறி என்ன?
எலியாக இருக்கின்றார் இந்த மக்கள்!
யாரணிவார் பூனைக்கு மணிதான் என்று. 2

சத்தியமும் அகிம்சையுமே தருமம் என்ற
சாத்வீகம் இனியிங்கு தழைக்கு தென்றால்
உத்தமராய் உலவிவரும் வணிகர் கூட
ஒதுங்கிடுவார் 'அவ்வழியில்' சட்டம் என்ற
கத்திதனைக் காட்டுவதால் பயனே இல்லை,
காசுதனைக் காட்டியவர் பிழைத்துக் கொள்வார்,
புத்திவரப் பொதுமக்கள் ஒன்று சேர்ந்தால்
'புதுவாழ்வை நாம்பெறலாம்' ஒன்று சேர்வோம்? 3

னக்கென்ன என்றுதுங்கி, இந்த நாட்டை
எவராண்டால் எனக்கென்ன? என்றே சொல்லி
தனக்கென்றே தான்வாழ்ந்த மடமை யாலே
தடுமாறித் திகைக்கின்றார் நிலைமை மீற.
மனக்கதவை மானிடரே திறந்து வைப்பீர்!
மறவழியில் சில நாட்கள் வாழ்ந்தால் போதும்!
சனிபோகும்! சண்டாளர் குணமும் போகும்,
தள்ளாடும் பாரதமும் தழைத்தே ஓங்கும்! 4



# புனிதப் பணி

சுதந்திர நாட்டிலே தூங்கிடும் மக்களே!
சுதந்திரப் பேச்செலாம் சோற்றுக்கு ஆகுமா?
விழிமின்! விழிமின்! உலகினைப் பாரீர்!
எழுமின்! எழுமின்! போதுமே உறக்கம்!
எத்தனைக் காலம்நாம் இப்படி வாழ்வது?
பித்தராய் வாழ்வது பேதமை யன்றோ!
உரிமைக் குரலை எழுப்பிடும் சோதரீர்!
உரிமைகள் பெற்றது ஒற்றுமை வளர்க்கவே!
மொழியில் குழப்பம் முடிவதாய் இல்லை!
வழிபல காணினும் வளருதே தொல்லை!
தாய்த்திரு நாட்டினை தனதென எண்ணியே
வாய்ச்சுவை கொள்ளவே மொழிபவர் இல்லை!
பொருளைப் பெறவும், புகழைப் பெறவும்
குறுக்கு வழியிலே செல்பவர் கோடி!
கிறுக்குப் பேச்சிலே களிப்பவர் கோடி!
செருக்குப் பேச்சிலும் திளைப்பவர் கோடி!
கோடி கோடியாய் மக்கள் இருந்தும்
கூடியே வாழ்ந்திடக் கருதுவோர் யாரே?
சுயநலம் சிந்தையில் ஆட்டியே படைக்கும்!
நயமிகு பொதுநலம் நலிந்தே கிடக்கும்!
எங்கும் இனவெறி! எங்கும் மொழிவெறி!
எங்கும் பணக்குறி! இல்லையே செந்நெறி!
வாதத்தில் கிடக்கும் மானிட கோடியே!
போதும் போதும் பாரதம் வீழ்ந்தது!
போன நாளெலாம் புண்மிகு நாட்கள்.
நாணம் வேண்டாம்! நேரம் வந்ததே!
நாடில்லா விடில் நாமெலாம் இல்லை!
ஈடிலா கொள்கைநம் இதயத்தின் எல்லை.
புனிதப் பணியிலே செயல்பட எழுவீர்!
இனியும் காலம் கழிப்பது இழுக்கே!

## வீர சபதம்

இன்றொரு சபதம் எடுப்போம் வாரீர்!
நன்றிதை நாளைக்கு என்றுது சேரீர்!
கெடுதலை விளைத்த கொடியரை விரட்டி
விடுதலை அடைந்ததும், வடுக்களை களைந்ததும்
உலகெலாம் அறியும். உண்மையும் புரியும்!
'நலமெலாம் நிறைகவே' என்றவாழ்த் தொலியும்
விண்ணைப் பிளக்கவே பாரதம் மலர்ந்தது.
எண்ணரும் வீரரின் இணையிலா உழைப்பால்.
"நாடு நமதே, நாட்டின் பெருமையாம்
பீடு காப்பதே பிறப்பின் பயனென"
உணர்ந்ததை மறந்தனர் உயர்ந்தநம் நாட்டினர்!
பணத்தையும் பகட்டையும் பெரிதாய் நினைத்தனர்!
வேட்டைக் காடென வணிகரும், சுரண்டும்
கோட்டைக் களமென அரசியல் தரகரும்
பேசினர் ஏசினர். பாரதம் என்றிடக்
கூசினர்! கருத்துக் குருடராய் மாறியே!
சுவராய் நின்றனர் சுதந்திரம் பேசியே!
அவரின் வழியிலே அனைவரும் சென்றனர்.
நாய்நா டென்பது தறுதலைப் பேச்சில்
பேய் வீடானது பெருமை பாழானது!
உரிமையில் ஊக்கம் இருந்தது பாரதப்,
பெருமையில் அவருக்குப் பற்றே இல்லை.
சொந்த உடலுள் சாக்கடை பாய்வதை
எந்த மடையனும் பார்த் திருப்பானோ!
இந்தபேர் அவலம் இந்த நாட்டில்தான்!

சிந்தனை செய்தே பார்த்தவர் எத்தனை?
பானைஇல் லாமலே சமைக்கப் பார்த்திடும்
பூனை குணத்தவர் பாரிலே நிறைந்தனர்.
எவர் செய்தாலும் தவறு தவறுதான்!
தவறினைச் சுட்டுதல் நமக்கது கடனே!
"தேசிய நினைவினை சிந்தையில் ஏற்றுதல்,
தேசிய வழியிலே செயலினை மாற்றுதல்,
தேசம் காத்திடத் தியாகம் செய்திடும்
ஆசையை மனதிலே ஆழ விதைத்திடல்,
தேசியச் சின்னம் தாயின் தாலிபோல்
வீசும் பேரொளி, எனவே எண்ணிட"
மக்களை மாற்றுதல் கற்றவர் கடமை!
குக்கலை ஒதுக்குவோம் குலைப்பது அதுகடன்.
இன்றே அப்பணி எடுத்தே ஒன்றுய்
குன்றில் விளக்கென அறத்தின் இலக்கென
பாரதத் தாய்க்குப் பழம்புகழ் சேர்க்க
பாரதப் பண்புடை படைதனைத் திரட்டுவோம்!
தாயகம் வாழ்ந்தால் வாழ்வோம்; வீழ்ந்தால்
தாயகத் துடனே வீழ்வோமே!

## புகழ்தான் மூச்சு!

துப்புறக் கவிழ்ந்தே கிடக்கும் நினைவை
துப்பித் தொலைத்தே துப்புர வாக்கிடு!
எப்பொழு தெங்கணும் எழுச்சியை, உணர்ச்சியை,
செப்பிடும் சிந்தையில் செழுமையை ஏற்றிடு!
கூனிக் குறுகிடும் கோழைபோல் தோன்றி
நாணியே நடுங்கும் நெஞ்சினைப் பிளந்தெறி!
சோம்பலில் சுகம்பெறும் உடலைச் சாடு!
வீம்பில் வளரும் அகந்தையை வீழ்த்து!
நமக்கென உரிமை, நமக்கென கடமை,
நமக்கென பெருமை இருப்பதை நினைத்திடு!
உடலால் மெலிந்து, உடையால் ஒடுங்கி
ஒடிந்தலர் கொடிபோல் நடையால் நலிந்து,
செல்லும் பாரத இளைஞர்க ளினமே!
வல்லமை வளர்க்கும் தோள்களை உயர்த்து!
பெண்மேல் பாயும் விழிகளை மாற்றி,
மண்தாய் பார்த்து வீரத்தை ஏற்று!
காதல் ஒருபுறம்: கல்வியும் ஒருபுறம்,
மோதல் ஒருபுறம்—முடியுமோ குறிக்கோள்!
அல்லவே அல்ல! அதில்தான் தோற்றோம்!
சொல்லவே வெட்கம்! சாடுக நிலையினை!
எல்லையில் எதிரிகள்! ஏச்சும் பேச்சும்
தொல்லையில் முடிய துரத்திடும் படைகள்!
எத்தனை இன்னல்கள் இருக்குதின் நாட்டில்!
அத்தனை போக்கவும் ஆட்சியால் முடியுமோ!
நாம்தான் நாட்டின் நாளைய மக்கள்!

ஆம்என உணர்வீர்! அடலென எழுவீர்!
இளைஞர் படையால் எத்தனை நாடுகள்
தளைகளை உடைத்துச் செழித்தன தெரியுமா?
காளையர் படைகள்! பாரத நாட்டின்
நாளைய படைகள்! நலம்தரும் படைகள்!
சொல்லில் செயலில் புனிதம் காக்கும்
வல்லமை தனையே வளர்த்திடு இன்றே!
புறப்படு தோழா! புகழ்தான் மூச்சு!
ஒருபடை போதுமே உலகினை ஆளவே!

## வெல்வோம் வாழ்விலே!

பனிமலை இமயம் பாரிலே உயர்ந்தது!
நினைவிலே அந்நிலை நமக்கெலாம் வேண்டும்.
கங்கை பெருகியே காத்திடும் நாட்டினை!
பொங்கிடும் கடமையால் அப்பயன் வேண்டும்.
வயல்வளம் போலவே மனநலப் பெருக்கால்
செயல்வளம் வேண்டும் பொதுநலம் செழித்தி
சோலை நிழல்போல் சுவைமிகு கனிபோல்
வேலை தனிலெல்லாம் வேண்டுமே அந்நிலை!
அலைகடல் துள்ளும் காட்சியே அழகு!
இளைஞரின் உடல்செயல் இப்படி வேண்டும்.
உண்ணும் உணவெனில் கொல்லும் புலிபோல்
உண்மையாம் வீரமும் தீமையை ஒழிக்கவே!
காற்றும் மழையும் கனலும் ஒளியும்
சாற்றிடும் கற்றவர் செயல்தனைக் காட்டவே!
இயற்கையாய் இருந்து இறைவன் வாழ்கிருன்!
இயல்பாய் வேண்டுமே இவ்வழி செல்லவே!
செல்வோம் சிந்தையில் அவன்புகழ் சொல்வோ
வெல்வோம் வாழ்விலே நலமெலாம் சூழவே!